உ

கடவுள்துணை.

திருவண்ணாமலையில்

எழுந்தருளியிருந்த

# அருணகிரிநாதர்

அருளிச்செய்த

# பஞ்சரத்நத் திருப்புகழ்.



இவை

அஷ்டாவதானம் - பூவை

கலியாணசுந்தரமுதலியாரால்

பரிசோதிக்கப்பட்டு



சென்னை-சூளை

நிரஞ்சனிவிலாச அச்சுயந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.



1892ளு

சிவமயம்.

# பஞ்சரத்நத்
# திருப்புகழ்.



தனனதனத்த தனந்தானதன
தனனதனத்த தனந்தானதன
தனனதனத்த தனந்தானதன
தனதான.

மலடிவயிற்று மகன்போலேயொரு
புதையலெடுத்த தனம்போலேயொளிர்
வயிரமடித்த களம்போலேயிள
முலைமானார்—

வலியவணைத்த சுகம்போலேகதி
ரொளிவிரேத்ந வடம்போலேபரி
மளமிகுபுட்ப வனம்போலேசுரா
நதிபோலே—

அலைகடல்பெற்றிடுபெண்போலேவரு
புலவர்தமக்கிரு கண்போலே கவை

யருகிலடுத்த சலம்போலேயுன
தழகாமோர்—

அமுதுபுசித்த ரசம்போலேதிரை
கடன்மடைவிட்ட சலம்போலேதின
மதிசயமுத்தமி ழன்பாலோதநி
னருடாராய்—

கலகலெனச்செல் சிலம்பாசீர்பெறு
மலைமகள்பெற்ற குழந்தாய்மாமத
கரிமுகனுக்கொரு தம்பீகானவர்
மகளாமோர்—

கடிமலர்மொய்த்தசுரும்பேஞானிகண்
மனதுருசித்த கரும்பேவானவர்
கவலைதணித்தரு ளன்பேமாயவன்
மருகோனே—

குலிசன்மகட்கொருநண்பாவேழிசை
யளிகள்சுவைத்த கடம்பாபோய்வரு

குணாகடலுக்கொரு சம்பானுய்வரு
வடிவேலா—

கொடியபிணிக்கு மருந்தேதாள்பணி
யடியர்தமக்கு விருந்தே தோகைகொள்
குருகுடத்து தூங்காவேரக
முருகோனே—

தானதனத்தத் தனந்தனுதன
தானதனத்தத் தனந்தனுதன
தானதனத்தத் தனந்தனுதன
தனதானு.

தேனைவடித்துச்சொரிந்ததோகொ தி
பாலுடனெக்கக் கலந்ததோநல
சீனியிலிட்டுப் பிசைந்ததோபல
கனிதாமே—

தேடியெடுத்துப் பிழிந்ததோநிறை
பாகுபதத்திற் சமைந்ததோவிவை
சேரவுருட்டத் திரண்டதோநவ
ரசமீதே—

ஞானமுளைத்துப் படர்ந்ததோவதி
லேயெழுபுட்பச் சுகந்தமோமறை
நாமகள்வித்தைப் ப்ரசங்கமோவென
வுரைநாவால்—

நாவலர்மெச்சிப் பணிந்துதாழவு
நீயெனைமெச்சிக் கனிந்துபேசவு
நானுனைமெச்சிப் புகழ்ந்துபாடவு
மருடாராய்—

யானைமதப்பட் டெழுந்ததாமென
வேயிருபத்மச் சதங்கையோலிட
வாறுமுகத்துக் குழந்தையாயரு
ளனைமார்பால்—

ஆறுமுலைச்செப்பருந்து பாலுட
னுறுமலைக்கட்சொரிந்த வாறென
வாறுமுலைக்குட் சுரந்தபாலதி
லமையாதே—

சோனமழைக்கொத் திருந்துலாவரு
கிரசமுத்ராத் தரங்கமேலெழு
சூரியனெக்கத் திரிந்துலாவிய
புதல்வோனே—

சோலைமலைக்குக் கடம்புபோலவி
ராலிமலைக்குக் கொழுந்துபோலுயர்
சுவாமிமலைக்குக் கரும்புபோல்வரு
முருகோனே— உ

தனன தனத்தத் தனத்ததத்தன
தனன தனத்தத் தனத்ததத்தன
தனன தனத்தத் தனத்ததத்தன
தனதானு.

கலியையலைத்துத் தொலைத்துவிட்டொ
பிணியையடித்துத் துரத்திவிட்டெழு[ரு
கவலைநெருப்பைத் தணித்துவிட்டற
நெறியாலே—

கடினகசப்புக் கினிப்புவிட்டென
துயரிலமுக்கைத் துடைத்துவிட்டொரு

கருணைமழைக்குட் குளிக்கவிட்டினி
யலையாதே—

அலையுமனத்தைப் பிடித்துவைத்தி
லுறையுமிருட்டுக் கருக்கலுக்குநி
னழகுவிளக்கைப் பதித்துவைத்தஃ
தவியாதே—

அறிவையுருட்டித் திரட்டிவைத்துநி
னமுதகுணத்தைத் துதிக்கவைத்தெனை
யடிமைபடைக்கக் கருத்துமுற்றிலு
நினையாயே—

மலைகள்பயப்பட் டொளிப்பதற்கொ
புகலிடமற்றுத் தவித்துநிற்கவும்
வடவனாமிக்குச் சலித்திருக்கவு
மதனுலே—

மலையரசற்குப் பழிப்பெனச் சொலி
யுரவின்முறைப்பற்றெனக்குறித்தபின்
மகிமைகிடைக்கக் குறிப்பைவைத்தமர்
விளையாதே—

குலவரைவிட்டுத் திசைக்களிற்றினை
யுடலைமிதித்துக் கிழித்ததிற்சொரி
குருதிகுடித்துப் பெருத்தசெப்பிள
முலையாளோர்—

குறமகளைக்கைப் பிடித்து மற்றொரு
துரைமகளைக்கைப் பிடித்துமிக்குள
குருகிரியைக்கைப் பிடித்திருக்குமெம்
முருகோனே— ரு

தனதனதனதன தந்தத்தத்தன
தனதனதனதன தந்தத்தத்தன
தனதனதனதன தந்தத்தத்தன
தனதானை.

அரிவையரொனுமிருதங்கக்கட்டிக
ளிருபுறமருவொரு சிங்கக்குட்டிநி
னறுமுகமதிபுனை செம்பொற்சுட்டியு
முகமீதே—

அழகொழுகியமது வுண்குத்துப்பியு
மவளிவள்விழிவரு தும்பிப்பட்சியு

மதுவிதுவெனுமிவைசண்டைப்பட்டது
மெழுநூரும்—

இரவியிலொளிரணியந்தத்திற்பொலி
யிமையவரவரவர் சிந்திப்புக்களு
மிறைமகபதிபயி விந்த்ரப்பட்டமு
மழியாதே—

இசையெழுகனகசதங்கைக்கொத்து
கலகலவெனுமர விந்தப்புட்பமு [கள்
மிருவிழிகுளிரவு மென்றைக்கிப்படி
வருவாயே—

குணகட லெனுமொரு தம்பட்டத்
தொனி, கிழிபடமதனனுடம்பைச்சுட்
டது, குளிர்தரவருண்மழைசிந்தத்தக்க
வர், குருநாதா—

குறமகள்கிளிமொழி கண்டிச்சைப்ப
டு,பரிமளகளபசு கந்தத்தைப்புனை

குவிமுலைமுகடும முந்தத்தைத்திடு
மணிமார்பா—

திறைகடலமுதொரு பெண்பெற்றி
ட்டது, தெரிசனைபெறவிருகண்பெற்றி
ட்டனு, தினம்விழி துயில்பவர் தங்கச்சி
க்கொரு, புதல்வோனே—

திமிரபடலமிகு துன்பத்துக்கெழு
தினகரனிளைபவ ரன்பைப்பெற்றுயர்
திரிசிரகிரியினி லின்பத்தைத்தரு
முருகோனே— ௬

*தனனத்தானன தாத்தத்தனுதன*
*தனனத்தானன தாத்தத்தனுதன*
*தனனத்தானன தாத்தத்தனுதன*
*தனதானு.*

வறுமைப்பாழ்பிணி யாற்றப்படாது
ள,முருகிப்போனதுதேற்றப்படாதினி
மகிமைக்கேடுகள் பார்க்கப்படாதிஃ
தமையாதோ—

வலியப்போயுடல் கூச்சப்படாமையு
முடியப்பேசிய நாச்சிக்கதாகையு
மறுசொற்காதுகள் கேட்கப்படாமையு
ம், வரலாமோ—

கறுவிப்பாய்புலிவேட்டைக்குளே வ
ரு, பசுவைப்போன் மிடியாற் பட்டபா
டொரு, கதையைப்போலிதையார்க்குச்
சொல்வேனின, மறியாயோ—

கவலைச்சாகர நீச்சுக்குளேயுயிர்
தவறிப்போகுமு னோட்டத்திலோடியு
ன், கருணைத்தோணியிலேற்றிக்கொள்
வாய்தின, மலைவேனே—

குறைபட்டேனுயிர்காத்துக்கொளா
யென, முறையிட்டேகரிகூப்பிட்ட நா
ளொரு, குளிற்போயுயிர்மீட்டுக்கொள்
வோர்திரு, மருகோனே—

குளிர்முத்தாலணி மூக்குத்தியோடி ருகளபப் பூண்முலே பார்த்துப் பெண் மோகினி, குவளேப்பார்வையின்மாட்டிக்கொள்வோர்பணி குருநாதா—

நறையிற்ருதகு பூக்கொத்திலேகனி கிழியத்தேனுமிழ் காய்க்கொத்திலே மயி, னடனக்கால்படு தோப்புக்குளேபல வயலூடே—

நதியிற்காவிரி யாற்றுக்குளேபயில் வளமைச்சோழநன் ஞட்டுக்குளேசிவ நகரிர்சீர்பெறு மோக்ஷத்தையேதரு முருகோனே— ரு

பஞ்சரத்நத்

திருப்புகழ்.

முற்றிற்று.

———